# ஸ்ரீ சீரடி சாயி நாத பூஜை

## 9 வியாழக்கிழமை
## விரத பூஜையின் மஹத்துவம்

நம்பிக்கை! பொறுமை!!

ஸ்ரீ சாயி பாபாவின்
அருளினால் பிறந்த குழந்தை



# பொருளடக்கம்

உ

ஓம் ஸ்ரீ சாயி ராம்

# ஸ்ரீ சீரடி சாயிநாத பூஜை

## 9 வியாழக்கிழமை
## விரத பூஜையின் மஹத்துவம்

ஸப்த ஸப்தாஹா ஸ்ரீ சாயி ஸத் சரித்திர பாராயணம்

(இந்த புத்தகத்தை 9 வார கால சமயத்தில் சிரத்தையுடனும்,
பக்தியுடனும் பாராயணம் செய்பவர்களுக்கு
ஸ்ரீ சீரடி சாய்நாதரின் அனுக்கிரஹமும் ஆசீர்வாதமும்
பரிபூரணமாகக் கிடைக்கும்)

**9 வியாழக்கிழமை விரத பூஜை முடித்தவர்கள் இப்புத்தகத்தை 9,18,21 என்ற எண்ணிக்கையில் வாங்கி கொடுக்கவும், தங்களால் இயன்றளவு அன்னதானம் அளிப்பது மஹா விசேஷம்**





**GSP PROCESS**
Velachery, Chennai - 42

# ஸ்ரீ கணேச பஞ்சரத்னம்



முதா கராத்த மோதகம்ஸதா விமுக்தி ஸாதகம்
கலாதராவதம்ஸகம் விலாஸிலோக ரக்ஷகம்
அனாயகைக நாயகம் வினாசிதேப தைத்யகம்
நதா சுபாசு நாசகம் நமாமிதம் விநாயகம் 1

நதேதராதி பீகரம் நவோதிதார்க்க பாஸ்வரம்
நமத்ஸீராரி நிர்கரம் நதாதிகாய துர்த்தரம்
ஸீரேச்வரம் நீதிச்வரம் கஜேச்வரம் கணேச்வரம்
மஹேச்வரம் ஸமாச்ரயே பராத்பரம் நிரந்தரம் 2

ஸமஸ்தலோக சங்கரம் நிரஸ்த தைத்ய குஞ்ஜரம்
தரே தரோதரம் வரம் வரேபவக்த்ர மக்ஷரம்
க்ருபாகரம் க்ஷமாகரம் முதாகரம் யசஸ்கரம்
மனஸ்கரம் நமஸ்க்ருதாம் மமேஸ்கரோமி பாஸ்வரம் 3

அகிஞ்சனார்த்தி மார்ஜனம் சிரந்தனோக்தி பாஜனம்
புராரி பூர்வ நந்தனம் ஸீராரி கர்வ சர்வணம்
ப்ரபஞ்ச நாத பீஷணம் தனஞ்ஜயாதி பூஷணம்
கபோலதான வாரணம் பஜே புராண வாரணம் 4

நிதாந்த காந்தி தந்தநாந்தம் அந்த காந்த நாத்மகம்
அசிந்த்யரூப மந்தஹீன மந்தராய ந்ருந்தனம்
ஹ்ருதந்ததே நிரந்தரம் வஸந்தமேவ யோகிநாம்
தமேகந்த மேவதம் விசிந்தயாமி ஸந்ததம் 5

மஹா கணேச பஞ்சரத்ன மாதரேண யோன்வஹம்
ப்ரகஸ்பதி ப்ரபாதகேஹ்ருதி ஸ்மரன் கணேச்வரம்
அரோகதாம தோஷதரம் ஸீஹாஹீதம் ஸீபுத்ரதாம்
ஸமாஹீதாயுரஷ்ட பூதிமப்யுபைதி ஸோசிராத் 6





# ஸ்ரீ சீரடி சாயிநாதரின் 9 வியாழக்கிழமை விரத பூஜையின் மகிமை

**சப்தசப்தாஹா சாயி சரித்திர பாராயண விவரம்:**

**துர்லபம் த்ரயேமே வைதத், தெய்வானுக்கிரஹ ஹேத்துகம் மனுஷ்யத்தயம் முமுக்ஷத்வம் மஹாபுருஷஸம்சயம்.**

ஸ்ரீ சீரடி சாயி சத்சரித்திர பாராயணத்தையும், விரத பூஜையையும் 67 நாட்களிலோ (சப்த சப்தாஹா) அல்லது ஒரு நாளில் குறிப்பிட்ட அத்தியாயங்கள் என கணக்கில் கொண்டு 9 நாட்களிலோ முடிக்க வேண்டும். அகில இந்திய சமாஜத்தால் வெளியிடப்பட்ட ஸ்ரீமத்சாய் ராமாயணம் எனும் புத்தகம் பாபாவின் அனுமதியோடும், அருளோடும் ஹேமந்த்பந்த் என்று பாபாவால் அன்புடன் அழைக்கப்படும் அன்னாஸாஹேப் என்பவரால் எழுதப்பட்டது. பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட புத்தகம் சாயிநாதரின் அருள் பரிபூரணமாக கிடைக்க நமக்கு உதவுகிறது.

கடவுளால் படைக்கப்பட்ட 84 லட்சம் ஜீவராசிகளிலேயே மிகவும் உன்னதமானது மனித ஜென்மம். அவனால் மட்டுமே இதே மனித ஜென்மத்தில் தனது மனதைக் கட்டுப்படுத்தி ஆத்ம ஞானத்தை பெறும் அவசாகமிருக்கிறது. தேவதைகள் கூட ஒரு தடவையாவது பூலோகத்தில் மனித ஜென்மம் எடுப்பதற்கு ஆர்வம் காட்டுகிறார்களாம். ஆதலால், இந்த மனித ஜென்மம் எவ்வளவு விசேஷமானது என்று நினைத்துப் பாருங்கள். சாயிநாதரின் சேவையில் ஜீவன் முக்திப் பெறுவதற்கு முயற்சிக்கலாம். சாயிநாதரின் பிள்ளைகளாகவே இருந்து இந்த ஜென்மத்தில் முக்தியடையலாம்.

ஸ்ரீ சீரடி சாயி நாதரை மனதில் தியானித்து செய்யப்படும் 9 வியாழக்கிழமை விரதம் மற்றும் சப்த சப்தாஹா பாராயணத்தையும் செய்து முடிக்கும் போது தங்களால் இயன்ற காணிக்கையை பக்தி சிரத்தையுடன் பாபாவிற்கு சமர்ப்பிக்க வேண்டும்.

இப்பூஜையை சுயமாகவோ அல்லது ஆச்சார்யரின் துணையுடனோ நமது வீட்டிலேயே செய்து ஸ்ரீ சாயிநாதரின் ஆசிர்வாதம், அனுக்ரஹம், ஆயுள், ஆரோக்யம், ஐஸ்வர்யம், பக்தி, ஞான வைராக்கியமும் பெற்று பிரம்மானந்தத்தைப் பெறலாம்.

**– சாயி சன்னதி**

# ஸ்ரீ சீரடி சாயிநாதரின் விரத பூஜைக்குத் தேவையான பொருட்கள்

**பூஜை சாமான்கள்:** மஞ்சள், குங்குமம், சந்தனம், விபூதி, அக்ஷதை, பஞ்சபாத்திரம், உத்தரணி, மணி, கலசம் அல்லது பெரியடம்ளரில் தீர்த்தம், அகர்பத்தி, தீப்பெட்டி, தீப ஆராதனைக்கு பசு நெய் அல்லது நல்லெண் ணெய், தேங்காய், பூ, பழங்கள், பிரசாதம் இவை எல்லாம் வைக்க இரண்டு பெரிய தட்டுகள் அவசியமென்றால் கை துடைக்க துணி வைத்துக் கொள்ளலாம்.

## ஸ்ரீ சீரடி சாயிநாதரின் ஸப்த ஸப்தாஹா விரத பூஜையை பாராயணம் செய்பவர்கள் பின்பற்ற வேண்டிய வழிமுறைகள்:

1. இப்பூஜையை சுயமாகவே அல்லது ஆச்சார்யரை நியமித்தோ செய்யலாம். ஆனால் சுயமாக செய்யும் போது நம் கவனம் பெருகும். ஈடுபாடு அதிகரிக்கும் என்ற காரணத்தால் சுயமாக செய்வது நல்லது.
2. பூஜையை தொடங்குவதற்கு முன் அனைவரும் ஒன்றாக "ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீ சாயிநாத் மஹாராஜ்கீ ஜய்" என்று 3 முறை கூற வேண்டும். பிறகு அவரவர் இஷ்ட தெய்வங்களை மனதில் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.
3. பின்னர், சாயிநாதரை மனதில் நினைத்து விபூதியை இட்டுக் கொள்ள வேண்டும். குங்குமம், சந்தனம் வைத்துக் கொள்ளலாம்.
4. பூஜை செய்யும் இடத்தில் ஒரு மனையை போட்டு, அதன் மீது புதிய வெள்ளை துணையையோ அல்லது துவைத்து சுத்தம் செய்த வெள்ளை துணையையோ போடவும்.
5. அந்த ஆசனத்தின் மீது சாயி பாபாவின் சிலையையோ அல்லது படத்தையோ வைத்து இரு பக்கமும் தீபம் ஏற்ற வேண்டும். பசு நெய்யிலோ அல்லது நல்லெண்ணையிலோ தீபம் ஏற்ற வேண்டும்.
6. பூஜை தொடங்குவதற்கு முன் பாபாவின் படத்திற்கோ அல்லது சிலைக்கோ பூ மாலைகளால் அலங்கரிக்க வேண்டும். நல்ல மனமுள்ள ஊதுவத்தியை ஏற்ற வேண்டும்.





எனக்கு சமர்ப்பிக்கப்படும் இலை, புஷ்பம், தீர்த்தம் எதுவாகிலும் அதை பரிசுத்தமான மனதோடும், பத்தியுடனும் எனக்கு சமர்ப்பிப்பார்களேயானால் அவற்றை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்கிறார் சாயிநாதர். இதையே தான் பகவத் கீதை 9வது அத்தியாயத்தில் ராஜவித்யா ராஜ குஹ்யா யோகத்தில் 26வது ஸ்லோகத்தில் கிருஷ்ண பரமாத்மா, அர்ஜீனனுக்கு கூறினார்.

**"பத்ரம் புஷ்பம், ஃபலம், தோயம், யோமே, பக்த்யா ப்ரயச்சதி ததஹம் பக்த்யுபஹ்ருதம்ச்'னாமி ப்ரயதாத்மன:"**

மேலுள்ள விசயத்தை நினைவில் கொண்டு, பரிசுத்தமான மனதோடும், பக்தி விசுவாசத்துடனும் பூஜை பாராயண நிகழ்ச்சியில் கலந்துக் கொண்டால், விசேஷமான பலனை பெறலாம் என்பது உறுதி.

## தாதாஜி கோபிநாத் ஜோஷி

12 வயதுள்ள என் மகனை அம்மையும், ஜுரமும் தாக்கியது. நோய் கடுமையாயிற்று. ஊதியம், தீர்த்தமும் கொடுக்கப்பட்டது. மருந்து எதுவுமின்றி என் மகன் குணமடைந்து விட்டான். அவனை சீரடிக்கு அழைத்து வருவதாக நேர்ந்து கொண்டேன். நீண்டகாலம் என் பிரார்த்தனையை நிறைவேற்ற தவறிவிட்டேன். என் மகனுக்கு வலிப்பு வர ஆரம்பித்தது. அப்போதுதான் என் பிரார்த்தனையை நிறைவேற்ற தவறிவிட்டது எனக்கு உறைத்தது. இந்த முறை குணமடைந்து விட்டால் நிச்சயமாகவும், விரைவிலும் அவனை சீரடிக்கு அழைத்து வந்து பல வகை பூஜைகளையும் செய்விப்பதாக மீண்டும் நேர்ந்து கொண்டேன். பையன் குணமடைந்து விட்டான். உடனே நான் அவனை சீரடிக்கு அழைத்துச் சென்றேன். அங்கே அபிஷேகம் செய்வித்தோம். பின்னர் அங்கிருந்து கிளம்பினோம். கோபர்காம் சென்று கொண்டிருந்த போது, பாதி வழியில் மீண்டும் வலிப்புகள் ஏற்பட்டன. எங்களுடன் இருந்த ஆர்.பி. புரந்தரே எங்களை சீரடிக்கு திரும்பச் சென்று நாங்கள் இன்னும் என்ன பிரார்த்தனை பூஜைகளை நிறைவேற்றாமல் விட்டோம் என்பதைக் கண்டறியச் சொன்னார். அபிஷேகம் மட்டுமே செய்வித்துவிட்டு இதர பூஜைகளைச் செய்யவில்லை என்பதை அறிந்து எல்லா நேர்த்திக் கடன்களையும் பூர்த்தி செய்தோம். நாங்கள் சீரடிக்குத் திரும்பச் செல்லும் வரை வலிப்புகளுக்கு ஆட்பட்டு அரைகுறை





நிலைலிருந்த சிறுவன் பாபாவின் சமாதிக்கருகில் ஏறிச் சென்று தன் கைகளைக் கொட்டினான். அதன் பின் எந்த தொந்தரவும் இல்லை.

மீண்டும் நாங்கள் சீரடிக்குச் சென்றோம். போகும் வழியில் கோபர்காமில் எங்கள் கோதாவரி நதியை நடையாகவே கடக்க வேண்டியிருந்தது. அந்த சமயத்தில் நதி கடக்கக் கூடியதாகத் தான் இருப்பதாக ஒருவர் எங்களிடம் கூறியிருந்தார். ஆனால் கையில் குழந்தையுடன் நானும் என் மனைவியும் ஆற்றில் நடுவில் செல்லுகை யில் நீரோட்டத்தின் வேகம் அதிகரித்து நாங்கள் அடித்துச் செல்லும் படியான நிலையிலிருந்தோம். எனக்குத் தலை சுற்றியது. கண்களை மூடி பாபாவை துணைபுரியுமாறு வேண்டினேன். ஐந்தே நிமிடங்களில், ஸாயி ஸமஸ்தான பணியாளரான பாலா குரவ் நடு ஆற்றில் வந்து என்னையும், என்னுடைய் மனைவியையும் கையால் பிடித்து ஆற்றைக் கடக்க உதவினார்.

நாங்கள் எங்கள் மகனின் சௌளத்தை (சிகை வைத்தல்) காசியில் கொண்டாடினோம். ஆதே சமயத்தில் சீரடியில் பாபாவுக்கு அபிஷேகம் செய்யப்பட வேண்டுமென்றும் விரும்பினோம். ஆனால் நாங்கள் சீரடியிலிருந்த நானு பூஜாரியிடம் தெரிவிக்க மறந்து விட்டதால், அதே நேரத்தில் பாபாவுக்கு அபிஷேகம் செய்விக்கப்படவில்லை. நாங்கள் காசியிலிருந்து கயாவுக்குச் சென்றோம். அங்கே கயாவைச் சேர்ந்தவருடைய இல்லத்தில் தங்கியிருந்தபோது பையனுக்கு வலிப்பு நோய் வந்து விட்டது. பாபாவுக்கு அபிஷேகம் செய்யப்படாதது எனக்கு நினைவுக்கு வந்தது. உடனடியாக நானு பூஜாரிக்கு இரண்டு அபிஷேகங்கள் செய்து வைக்கும்படி (ஒன்று தவறுதலுக்கு பிராயச்சித்தமாக ) கடிதம் எழுதினேன். அதன் பின்னர் சிறுவனுடைய உடல் நலம் சீராக அமைந்து, எங்கள் பயணமும் இனிதே முடிவுற்றது.

என் பையனுக்கு ஏதோ ஒரு வகை காய்ச்சல் வந்தது. அது என்ன காய்ச்சல் என்பதை யாராலும் கண்டறிய முடியவில்லை. ஊதியும், தீர்த்தமும் நோயை குணப்படுத்தியது. அவன் கால்கட்டைவிரலில் பெரிய வீக்கம் கண்டது. மருத்துவர் அறுவை சிகிச்சை செய்ய வேண்டுமென கூறினார். ஆனால், ஊதியே நிவாரணம் அளித்து விட்டது. நான் பாபாவையே நம்பியிருக்கிறேன். சௌக்கியமாக இருக்கிறேன்.





# அப்துல் ரஹீம் ஷம்ஸீதீன் ரங்காரி

தானேயில் பிளேக் நோய் பரவியிருந்தது. சீரடியிலும் பரவியிருந்தது என நினைக்கிறேன். அப்போது என் மனைவி சுமார் ஒரு மாத காலமாக ஏதோ ஒருநோயால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். தொண்டை, கன்னங்கள் முதலியவை வீங்கி, அவளால் சாப்பிடக்கூட முடியவில்லை. மருந்துகள் பயனற்றுப் போயின. ஆர்.ஜி.குப்தே என்ற உள்ளூர் வழக்குறைஞர் என் நண்பர். அவர் என் மனைவியை சீரடிக்கு அழைத்து சென்றால் குணமடைவாள் எனக் கூறினார். ஆகவே நாங்கள் சென்றோம். பயணம் தொடங்கியது. அவளால் எதையுமே சாப்பிட முடியவில்லை. ஆனால் நாங்கள் சென்று கொண்டிருந்த போது, இகட்புரியில் அவளால் தேநீர் அருந்த முடிந்தது. நாசிக்கில் மேலும் கொஞ்சம் உட்கொள்ள முடிந்தது. இரு ஒரு நல்ல சூசகம். அவள் துரிதமாக குணமடைந்து வருகிறாள். நாங்கள் சீரடிக்குச் சென்றோம் . அங்கு மசூதிக்கள் நுழைந்து சாய்பாபாவைப் பணிந்தேன். அவர் என்னுடன் இந்துஸ்தானியில் உரையாடினார்.

பாபா : நீ எங்கிருந்து வருகிறாய் ?

நான் : தானே.

பாபா : எதற்காக ?

நான் : என் மனைவிக்கு தொண்டையில் வீக்கம், முதலியான.

பாபா : அவளை மசூதிக்குள் வரச்சொல்

நான் அவளை மசூதிப் படிகளில் ஏற்றி அழைத்து வந்தேன். அவள் பாபாவை வணங்கினாள். அவர் அவள் கையைத் தொட்டு

**“குதா அச்சா கரேகா”** (அதாவது கடவுள் நன்மை செய்வார்) எனப் பகன்றார். அவர் கேட்காமலேயே நான் அவரிடம் ரூ. 1–4–0 அளித்தேன். அவர் அதை ஏற்றுக் கொண்டு எனக்கு ஊதி வழங்கினார். அதன் பின்னர் இரண்டு மணி நேரம் தங்கினேன். என் மனைவியின் வீக்கம் விரைவாக வடிந்து கொண்டிருந்தது. ஆகவே, பாபாவின் அனுமதியைப் பெறாமலேயே நாங்கள் உடனே திரும்பிச் செல்ல புறப்பட்டோம் . அவர் என்னை அங்கேயே தங்கும்படி கூறியிருந்தார் ஆனால் வியாதி குணமடைந்து விட்டதால், நாங்கள் கிளம்பிவிடலா மென எண்ணினேன்.

எங்களை ஏற்றி வந்த டோங்கோ (குதிரை வண்டி) கிராமத்திலேயே இருந்தது. அதை அமர்த்திக் கொண்டு நாங்கள் கோபர்காமுக்கு





புறப்பட்டோம். எந்த தொந்தரவும் இல்லாமல் பாதி தூரத்தை கடந்து விட்டோம். ஆனால் அதற்குப் பின்னர் வண்டியின் அச்சு முறிந்துவிட்டது. சாலையில் நடுவழியில் நின்றோம். இரவு நேரம் என்பதால் எந்த போக்குவரத்து சாதனமும் கிடையாது. இரவின் கொடுமை, கொள்ளையரால் தாக்கப்படக்கூடிய அபாயம் . யாரும் விரும்பாத ஒரு சங்கடமான நிலை. பாபாவின் சொற்களை மதியாது வந்ததை நினைத்து துக்கித்தோம். இந்த நிலைமை 2 மணிநேரம் நீடித்தது. நள்ளிரவுக்குப் பின்னர், ஒரு வண்டி வரும் ஓசை கேட்டது. கூடவே. "தானாவாலா! தானாவாலா! என ஒரு குரலும் ஒலித்தது. நான் தான் தானாவாலா என கூறினேன். எங்களுடைய சங்கடம் அவனுக்கு எப்படித் தெரிந்தது. இந்த அகாலத்தில் எங்ஙனம் அங்கே வர நேர்ந்தது என அவனை நான் வினவினேன். ஸயிபாபா அனுப்பி வைத்ததாக பதில் வந்தது. "எதற்காக" என்ற கேள்விக்கு, "உங்களை அழைத்து வர" என்ற பதில். நாங்கள் டோங்காவில் ஏறி சீரடி வந்தடைந்தோம். இரவு மணி 1 அல்லது 2 இருக்கலாம். நாங்கள் மசூதியை அடைந்தபோது, "என் அனுமதியின்றி நீங்கள் புறப்பட்டுச் சென்றீர்கள். அதன் பலனை அனுபவித்தீர்கள்" என்றார் பாபா. "ஆம் என்னை மன்னித்தருள வேண்டும். தங்கள் அனுமதியில்லாமல் சென்றதன் பலனை அனுபவித்து விட்டேன்". என நான் பதிலளித்தேன். இரவின் மீதிப் பகுதியை மசூதியின் அருகிலேயே தங்கி கழிக்கும்படி கூறிவிட்டு, அவர் தமது வழக்கமான தியானத்திலாழ்ந்தார்.

## ஆதாம் தலாலி

நான் ஸாயிபாபாவின் பழைய பக்தன். என் அனுபவங்கள் ஏற்கனவே ஸாயி லீலா மாசிக்கில் வெளி வந்துள்ளன. நான் வெகு நாட்களாக ஸாயி பாபாவிடம் போய் வந்து கொண்டிருந்தேன். மிக அன்புடனும், தாராளமாகவும் அவர் இருப்பார். பல சந்தர்ப்பங்களில் அவர் எனக்கு உதவியுள்ளார். சில வியத்தகு சம்பவங்களை நான் கூறுகிறேன்.

என் மகனுக்கு திருமணம் நடக்க வேண்டும். இதை பாபாவிடம் தெரிவித்து அவருடைய ஆமோதிப்பையும், அனுமதியையும் வேண்டினேன். ஒவ்வொரு முறை நான் கேட்ட பொழுதும் அவர் தட்டிக் கழித்தார். அவருக்கு எழுத்து மூலமாகவும் கேட்டு வந்தேன். அப்போழுதும் வழக்கமாக பாபாவிடமிருந்து, அல்லா மாலிக் ஹை





என்ற ஒரே ரீதியான பதிலே கிடைத்தது. கடைசியாக மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு என் திருமணத்தை நடத்தலாம் என அவர் பதிலளித்து, அதற்காக ஒரு தேதியையும் குறித்து அந்த தேதியில் விவாகத்தை கொண்டாட உத்தரவிட்டார். உதவிக்கு பாபாவை நம்பினேன். குறிக்கப்பட்ட தேதிக்குப் 10 தினங்களுக்கு முன்னால் திடீரென எனக்கு ஒரு வேலை கிடைத்தது. அதற்கான தொகையும் கொடுக்கப்பட்டுவிட்டது. இவ்வாறு எனக்கு ஓரளவு நிவாரணம் கிடைத்தது. என் திருமண நிதிக்கு சிறிது சிறிதா தொகைகள் சேர்ந்து பாபாவால் நிர்ணயிக்கப்பட்ட தேதியில் திருமணத்தை நடத்த முடிந்தது. அவர் என்னிடம் வேறு உருவங்களில் வந்திருக்கிறார்.

**உதாரணமாக,** ஒரு சமயம் அவர் ஒரு பிராம்மணன் உருவில் வந்து எதாவது தானமளிக்கும் படி கேட்டார். அப்போது நான் அவருக்கு இரண்டனா அளித்தேன். ஒரு சமயம் அவர் என்னிடம் ஒரு மார்வாடியாக வந்து பசியுடன் இருப்பதாகக் கூறினார். நான் அவரிடம் நான்கு அணா கொடுத்து ஒரு மார்வாடி ஓட்டலுக்குச் சென்று உணவு பெற்றுக் கொள்ள சொன்னேன். பின்னர் நான் சீரடிக்குச் சென்ற போது, பாபா அந்த உருவங்களில் என்னிடம் நிதனை எடுத்துக் காட்டும் சில பொருள் புதைந்த வார்த்தைகளைக் கூறினார். உதாரணமாக, என்னைப் பற்றி வேறு ஒருவரிடம் நான் இவனிடம் சென்றேன், அவன் என்னை சாப்பிட வந்தேன். இங்கு என் வீட்டில் அவருடைய படத்தை வைத்திருக்கிறேன். அதன் முன் ஊதுவத்தி ஏற்றி வைக்கிறேன். சமீப காலத்தில் கூட நான் சீரடிக்கு சென்று வந்து கொண்டிருக்கிறேன்.

## கங்காதர் விஷ்ணு சஹீரசாகர்

பாபாவுடைய பக்தர் பாலா நெவாஸ்கர் ஜயகுடி எங்கள் நிலத்தின் குத்தகைக்காரர். ஆவர் எங்கள் நிலத்தை தனது என உரிமை கொண்டாடினார். எங்கள் போஷகரான அவரை தன்னுடன் சீரடிக்கு வரும்படியும், தகராறை தீர்ப்பதை பாபாவிடம் விட்டுவிடும்படியும் கூறினார். அவர்கள் நெவாஸாவிலிருந்து தன் தாயாருடன் வந்தனர். என் மாமாவும், அன்னையும் பாபாவுக்கு பரிச்சயமில்லாதவர்கள். அவர்கள் மசூதிக்குள் வந்தவுடன், அவர்கள், அவர்கள் வணங்கு வதற்கும் முன்னதாகவே பாபா,

நெவாஸ்கரை நோக்கி, "நிலத்தை என் குழந்தைகளிடம் கொடுத்து விடு. ஏன் அவர்களை தொந்தரவு செய்கிறாய்"? எனக்கூறிவிட்டார். நாங்கள் நெவாஸாவுக்கு திரும்ப சென்றோம். ஆனால் பாலா நிலத்தை திருப்பிக் கொடுக்க மறுத்தார். நீதிமன்றம் மூலம் அதை நாங்கள் திரும்பப் பெற்றோம் பாலாவுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது. அன்று ஒரு கனவு கணடேன். என் முன் பாபா நிற்கிறார். இன்று உன் வீடு உன் பெயரில் தீர்ப்பாகிறது. நீ ஏன் தூங்கிக் கொண்டிருக்கிறாய்? சீரடியில் ஜாத்ரா (விழா) நடைபெறுகிறது. நீ வந்து அங்கு உண்பாயாக என அவர் கூறுகிறார். அவர் என்னை போஜன கூடத்துக்கு அழைத்து செல்ல,நான் உணவு எடுத்துக் கொண்டு அவரை வணங்குகிறேன்.நான் விழிப்புற்றேன். 4 தினங்களுக்குப் பின்னர் என் சகோதரனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. நான் கண்ட கனவு அதே தினம் எங்கள் வீடு சம்பந்தமாக அகமத்நகர் ஜில்லா கோர்ட்டில் நாங்கள் தொடுத்திருந்த வழக்கு எங்களுக்குச் சாதகமாக தீர்ப்பாகியிருந்தது. இதன் மூலம் பாபாவிடம் என் நம்பிக்கை பெருமளவில் அதிகரித்தது.

## தினகர் ராவ் ஜயகர்

நான் ஸாயி பாபாவுடன் இருந்திருக்கிறேன் ஒரு சமயம் அவருடன் நான் மசூதியில் இருந்த போது பயங்கர ஊளையுடன் புயல் வந்தது. காற்றும், மழையும் பலமாக இருந்தது. சில நிமிடங்களுக்குப் பின்னர் ஸாயிபாபா கட்டடத்தின் முகப்பில் நின்று கொண்டு (புயலைப் பார்த்து இருக்க வேண்டும்) "ஜரா தாவா" '**கொஞ்சம் நில்**' என கத்தினார். பின்னர் புயல் விரைவாக அமைதியடைந்தது.

## துகாராம் பார்கு

ஸாயி பாபாவுடன் சொந்தமாக எனக்குச் சில அனுபவங்கள் ஏற்பட்டுள்ளன. கோதாவரி வாய்க்கால்களில் முதன் முதலாக நீர் திறந்துவிடப்பட்டபோது இருபது மைல் தொலைவிலுள்ள காரஞ்ஜிகாம் என்ற கிராமத்துக்கு, வேலை தேடி பிழைப்பை நடத்துவதற்காக புறப்பட்டுக் கொண்டிருந்தேன். கிளம்பிய போதே, சீரடியிலேயே கேபர்காம் சாலையில் நான் இருந்தபோது லெண்டிக்கு செல்லும் போதோ, அங்கிருந்து திரும்பும்போதோ, வழியில் பாபா என்னை சந்தித்தார். அவர் என் கழுத்தைச் சுற்றி தம் கையை





என் தோளில் போட்டுக் கொண்டு 'போகாதே' எனக் கூறினார். அவருடைய சொல்லை மதியாது நான் அந்த கிராமத்துக்கு போனேன். நான் அங்கு போய் சேர்ந்த தினம் எனக்கு காய்ச்சல் கண்டு நீண்ட காலம் விடவில்லை. பிழைப்புக்கு வேலை செய்வது என்பது நடவாத காரியம். ஆகவே என்னை கவனிப்பதற்கு என் உறவினர்களின் தயவை நாடியிருக்கும் படி ஆனது.

பதினைந்து நாட்கள் காய்ச்சலுக்கப் பிறகு, சீரடிக்கு திரும்பிச் செல்லும் அளவுக்கு எனக்கு தெம்பு வந்தது. ஆனால் இங்கு வந்தும் சுமார் 45 நாட்கள் ஜுரத்தால் அவதிப்பட்டேன். பிறகு பாபாவின் ஊதியைப் (விபூதி) பெற்று வரும்படி என் தாயை அனுப்பினேன். அதை இட்டுக் கொண்ட மறுதினமே ஜுரம் நின்றது.

## விநாயக் தாஜி பவே

நான் ரெயில்வே கம்பெனியில் மாதம் ரூ.90 சம்பளத்தில் குமாஸ்தாவாக இருந்தேன். எனக்கு ஒரு குரு கிடைக்க வேண்டும் என்ற அவா, குரு கீதையை ஒரு மாதக்காலம் பாராயணம் செய்து வந்தேன். நான் எதிர்பார்த்தது போல் அந்த காலத்தினுள் எனக்கு ஒரு குருவோ, தத்தரின் காட்சியோ கிட்டவில்லை. பிறகு, குருவுக்கு உகந்ததான ஒரு வியாழக்கிழமை நான் தத்தருடைய ஆலயத்துக்குச் சென்றேன். அவ்வாலயத்தில் தத்தருடைய திருவுருவம் இருந்தது. ஆனால் நான் அங்கே சென்ற போது, அந்த திருவுருவம் இருக்குமிடத்தில் நான் கண்டது நன்கு வடிவமைக்கப்பட்ட ஒரு சமாதி. அங்கே ஸாயிபாபா பற்றி அன்னா சாகேப் தாபோல்கர் எழுதியுள்ள புத்தகத்தை எடுத்துப் பிரித்தேன். அங்கே என் கண்ணில் பட்டது ஸாயி ஸமாதியின் படம் .

நான் தத்தர் ஆலயத்தில் கண்ட சமாதியை அப்படியே அந்தப் படத்தில் கண்டேன். ஆகவே ஸாயி பாபாவே எனது குரு என நான் அனுமானம் செய்தேன். சில காலம் அவருடைய ஊதியை எடுத்துக் கொண்டு அவரைப் பற்றிய புத்தகங்களைப் படித்தேன். ஆனால் சீக்கிரத்திலேயே நான் அதிருப்தியுற்றேன். ஒரு சமாதி குருவாகாது. நான் நாடியது ஒரு உயிருள்ள குருவை, அவருடன் தொடர்பு கொள்வதை. ஆதலால் குரு கீதையை பெறுவதற்கு நிச்சயமான வழி என மீண்டும் உணர்ந்து கொண்டு, என் பாராயணத்தை மறுபடியும் ஆரம்பித்து ஒரு வாரம் செய்து வந்தேன். அப்போது நான் கேத்காம்

நாராயண மகராஜை கனவில் கண்டேன். அவர் தான் எனக்கு குரு என அனுமானித்து, கேட்காமுக்குச் சென்றேன். அங்கே இரவில் ஒரு கனவு. நாராயண மகராஜ் என் முன் தோன்றி **"நானும், ஸாயி பாபாவும் வேறு பட்டவர்களல்ல. நீ ஏன் அங்கே போகவில்லை ?"** என கேட்கிறார். எனக்கு எடுத்துரைப்பார் யாருமில்லை என நான் பதிலளிக்கிறேன். நான் சீரடிக்குச் சென்று ஸாயிபாபாவை என் குருவாக வரித்தேன். ஒரு சாது என் கைரேகை பார்த்துவிட்டு ஸாயி பாபாவே உன் குரு எனக் கூறினார்.

## சாமராவ் ராவ்ஜி ச்ரோத்ரி

நான் சீரடியில் ஸாயிபாபாவிடம் ஒரு முறை தான் சென்றிருக்கிறேன். நான் பாபாவிடம் சென்று வணங்கிவிட்டு அவர் முன் அமர்ந்தபோது, என் மனத்தில் ஒரு கேள்வி எழுந்தது. ஒரு ஆலயத்தில் புராணம் படித்துக் கொண்டிருக்கும் பாய் என்ற ஒரு மாதிடம் என்னை பாபாபோகச் சொன்னார் அங்கே நான் போன போது சுமார் 50 வயது மதிக்கத்தக்க ஒரு பிராம்மண ஸ்த்ரி புராணம் படித்துக் கொண்டிருந்தாள். அங்கே அமர்ந்து அதைக் கேட்டேன். அப்போது பாபாவின் முன்னிலையில் என் மனதில் எழுந்த கேள்விக்கு பதில் அவள் படித்த பாதத்தில் காணப்பட்டது. இது என்னுடைய பிரச்சனைக்கு தீர்வு காண பாபா கையாண்ட வழி.

## எஸ்.ஏ.பதாங்கர்

ஸாயி பாபா பற்றி முதன் முதலாக நான் என் நண்பர் திரு.சாமந்த் கூறக் கேட்டேன். என் வீட்டுச் சுவரில் தொங்கவிடப் பட்டுள்ள அவரது போட்டோவை வழிபடத் தொடங்கினேன். ஒரு சமயம் என் குழந்தை பல தினங்களாக காய்ச்சலில் படுத்தது. ஓரிரவு இரண்டு அல்லது மூன்று மணிக்கு ஒரு பகீர் குழந்தையை தொட்டுக் கொண்டிருந்தார். நான் அருகில் வந்து கரங்குவித்து நமஸ்காரம் செய்தேன். தம்மை நெருங்க வேண்டாம் என அவர் தமது கைகளை ஆட்டி விட்டு "குழந்தை குணமடையும்" எனக் கூறினார். மற்றொரு சமயம் இரண்டு குழந்தைகள் நோய் வாய்ப்பட்டன. "நான் பாபாவின் படத்தை நோக்கி குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என வேண்டினேன். நான் தெர்மாமீட்டரை

கையிலெடுத்து பாபாவின் படத்தின் மீது வைத்து நான் தெர்மா மீட்டரை வைத்து குழந்தையின் வெப்பநிலையை பார்ப்பேன். குறைந்திருந்தால், தங்களிடம் விசுவாசம் வைத்து ராமநவமிக்கு குழந்தையை தங்களிடம் அழைத்து வருகிறேன், இல்லாவிட்டால், எனக்கு எப்படி விசுவாசம் உண்டாகும் ?" இவ்வாறு கூறிக்கொண்டே தெர்மாமீட்டரை படத்திலிருந்து எடுத்து குழந்தையின் வெப்பத்தை சோதித்துப் பார்த்தேன். என்ன விந்தை குழந்தையின் வெப்பநிலை சமநிலை அடைந்திருந்தது.

## லக்ஷ்மண் கச்சேச்வர் ஜாகாடி

பல ஆண்டுகளாக நான் ஸாயிபாபாவின் பூஜை, ஆரத்தி செய்து வருகிறேன். நான் பாபாவின் வாழ்நாட்களிலேயே பாபு சாகேப் ஜோகுக்கு உதவியாளனாக இப்பணியைத் தொடங்கி விட்டேன். என் தமக்கையின் கணவர் பாபாஜி இங்கிருந்தார். முதலில் எப்போதாவது அவர் வீட்டிற்கு வருவேன். ஒரு இரவு நான் சங்கம் நேரில் இருந்தபோது, ஸாயிபாபா என் கனவில் தோன்றி "பிள்ளாய் உறங்குகிறாயா ? இங்கே இருக்காதே, சீரடிக்கு வா, சீரடியில் நிறைய பொழுது போக்கு உள்ளது" எனக் கூறினார். காலையில் பாபாஜியின் தந்தை எங்கள் கிராமத்துக்கு வந்திருந்தார். அவர் சீரடிக்கு வந்து தனக்கு உதவியாக இருக்கும்படி என்னை அழைத்தார். நான் அவருடன் சீரடிக்கு வந்து, கொஞ்ச காலம் அவருடன் தங்கினேன். சீரடியைச் சுற்றியுள்ள கிராமங்களுக்குச் சென்று என் பிக்ஷீகி தொண்டின் மூலம் என் ஜீவனத்திற்கு உழைத்தேன். மந்திரில் ஸாயி பாபா பூஜையில் பாபுஜிக்கு உதவியாக இருந்தேன். சில ஆண்டுகள் (ஓரிரண்டு ஆண்டுகள்) தன்னிச்சையாக, ஊதியம் எதுவுமில்லாமல் பாபாவுக்கு பூஜை தொண்டில் ஈடுபட்டப் பிறகு, சமஸ்தான நிர்வாகத்தால் நான் நிரந்தர பூஜாரியாக நியமிக்கப்பட்டேன்.

## கணேச ரகுநாத் தேலி

நான் ஸாயி பாபாவிடம் சென்றேன். என்னிடம் தக்ஷிணை கேட்ட பாபா "ஒரு ரூபாய், இரண்டா, ஆறு பைசா கொடு" எனக் கேட்டார். என் சட்டைப் பையில் இருந்தது சரியாக அந்தத் தொகையே,

அவர் அந்தத் தொகையை கேட்டது அவருடைய அதிசயமான ஞானத்தின் அடிப்படையிலேயே, நான் அந்தத் தொகையைக் கொடுத்தேன். என்னுடன் சந்திராபாய் என்ற நர்ஸ் இருந்தாள். பாபா அவளிடம் ரூ.6–7–0 கேட்டார். அதுவும் அவளிடம் இருந்த சரியான தொகையே. அவள் அந்தத் தொகையைக் கொடுத்தாள். அன்றைய தினமே திரும்பிச் செல்ல பாபாவிடம் அனுமதி கேட்டோம். "இன்னும் சிறிது காலம் இருந்து விட்டுப் போகலாமே ?" என பாபா அவளிடம் சொன்னார். அவள் வேறு இடத்தில் முன்னதாகவே நிர்ணயிக்கப்பட்ட பணிகள் இருப்பதாகச் சொல்ல, அன்று இரவே நாங்கள் சீரடியை விட்டு புறப்பட்டோம். அன்று இரவிலேயோ அல்லது விடியற் காலையிலோ அவள் வீட்டைச் சேர்ந்தடைவதற்கு முன், அவள் வீட்டினுள் கள்வர்கள் புகுந்து ரூ.500 மதிப்புள்ள பொருட்களை திருடிச் சென்றதோடு வேறுவித சேதமும் விளைவித்திருந்தனர். எனக்கு வேறு எந்த அனுபவமும் கிடையாது. ஸாயிபாபாவை தரிசிக்க வேண்டும் என்று மட்டுமே நான் சென்றேன். பாபா எனக்கு அவரிடம் விசுவாசம் ஏற்படச் செய்தார். அது போதும்.

## அப்பாஜி ஸுதர்,சீரடி

என் காலில் கொப்பளங்கள், நீர்வடியும் படைபோல் இருந்தது. கோபர்காம் அரசு வைத்தியர்களிடம் சிகிச்சைக்குச் சென்று ரூ.200 செலவழித்தேன், பயனில்லை. சாமா, அதாவது மாதவராவ் தேஷ் பாண்டே மருந்துகள் கொடுத்தார். பலனளிக்கவில்லை. பின்னர் நாசிக் ஆஸ்பத்திரிக்குப் போனேன், அதுவும் பயனற்றுப் போனது. அங்கே எட்டு தினங்கள் ஆஸ்பத்திரிலேயே தங்கியிருந்தேன். ஓர் இரவு என் தூக்கத்தில் பாபா எனக்கு காட்சி தந்தார். "புராணம் வாசிக்க சீரடிக்கு திரும்பிப்போ" எனப் பணித்தார். படையினால் அவதிப்படுவதால் சிகிச்சை பெற நான் நாசிக்குக்கு வந்திருப்பதாக கூறினேன். "என் புராணத்தைப் பாராயணம் பண்ணிக் கொண்டு, ஊதியையும் தடவி வா, நிவாரணம் கிடைக்கும்" என பாபா பதிலளித்தார். பின்னர் நான் சீரடிக்கு

திரும்பினேன். நான் சீரடிக்கு வந்த சமயம், புராணம் வாசித்து வந்த விட்டல் ராவ் மராத்தி சிருவால் செல்ல வேண்டியிருந்தது. திரும்பி வந்த நான் சீரடியில் பஸ்ஸிலிருந்து இறங்கியவுடன், அவர் அந்த பஸ்ஸில் ஏற வந்தவர் பாபாவின் சன்னதியில் புராண பாராயணம் தொடர்ந்து செய்ய வேறு யாருமில்லை என்றும், தான் சிருவாலிலிருந்து திரும்பி வரும்வரை என்னைப் பாராயணம் செய்யும்படியும் கூறினார். அதை, அதாவது ஞானேச்வரி ஏகநாத பாகவதம், அத்யாதம் ராமாயணம், ஸாயி ஸச்சரித்திரம் ஆகிய வற்றை, வாசிக்க ஏற்றுக் கொண்டேன். அது முதல் தினமும் ஸாயி பாபாவின் சன்னதியில் அவற்றை வாசித்து பாபாவின் ஊதியையும் தடவி வந்தேன். ஏழு நாட்களில் என் படை வியாதியிலிருந்து எனக்கு பூரண நிவாரணம் கிடைத்தது.

என் மற்றொரு அனுபவம் இது. சீரடியிலிருந்து முல்தான் ஃபடேசந்த் மார்வாடிக்கு நான் ரூ.350.00 கொடுக்க வேண்டியிருந்தது. இந்தக் கடனுக்காக என் மீது வழக்கு தொடுத்து என்னை கைது செய்ய வைப்பதாக அவர் அச்சுறுத்தினார். நான் பயந்து விட்டேன். அப்போது பாபா என் கனவில் தோன்றினார். என்னையும் மேலும் இருவரையும் கீதையின் சுலோசனங்களை ஒன்றன் பின் ஒன்றாக சொல்லும்படி பணித்தார். அவர்கள் அப்படியே செய்தனர். என் முறை வந்த போது நானும் சுலோகங்களைக் கூறினேன். அப்போது பாபா உனக்கு என்ன வேண்டும்? என்று என்னிடம் கேட்டார். என் கடனைப் போக்கியருளுமாறு நான் அவரிடம் வேண்டினேன். கடன் அடைக்கப்பட்டு விடும் என அவர் பதிலளித்தார். அடுத்த நாள் காலை, கடனளித்தவர் என் வீட்டிற்கு வந்து தனக்கு ஒரு வீடு கட்டித் தரவேண்டுமென கேட்டார். நான் அவருக்கு வீட்டைக் கட்டி முடித்தவுடன் என் கடன் பத்திரத்தை திருப்பிப் கொடுத்து விடுவதாக எழுத்து மூலம் அவர் ஒரு ஒப்பந்தத்தை என்னிடம் அளித்தார். ஒரு மாதத்தில் வேலையை முடித்தேன். அவர் பத்திரத்தை திரும்பக் கொடுத்து விட்டார். நான் அதைக் கிழித்து தூர எறிந்தேன்.

## ஓம் ஸாயிராம்

# ஸ்ரீ சாயி நாத பூஜை

ஸ்ரீ சாயிநாதரின் பூஜையை ஆரம்பிப்பதற்கு முன் அவரவர்களின் குலதெய்வத்தை வேண்டிக் கொண்டு ஆரம்பிக்கலாம்.

**ஆசமனம்:**

கீழ்கண்ட மந்திரத்தைச் சொல்லி, மூன்று முறை சொல்லவும்.

**ஓம் அச்யுதாய நம:, ஓம் அநந்தாய நம:,**
**ஓம் கோவிந்தாய நம:**

கீழே கொடுக்கப்பட்டுள்ள மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு வலது கை விரல்களால் அந்தந்த அங்கங்களை தொடர வேண்டும்.



ஓம் கேசவாய நம:
ஓம் நாராயணாய நவ:
ஓம் மாதவாய நம:
ஓம் கோவிந்தாய நம:
ஓம் விஷ்ணவே நம:
ஓம் மதுஸூதனாய நம:
ஓம் வாமனாய நம:
ஓம் ஸ்ரீதராய நம:
ஓம் ஹருஷீகேசா'ய நம:
ஓம் பத்மநாபாய நம:
ஓம் தாமோதராய நம:

**கணபதி த்யானம்**

சுக்லாம்பரதரம் விஷ்ணும் ச' சிவர்ணம் சதுர்புஜம்|
ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோபசா ந்தயே

**குரு த்யானம்**

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேச் வர:
குருஸ்ஸாக்ஷாத் பரப் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:
நாராயண ஸமாராம்பம் | வியாஸ ச'ங்கர மத்யமாம்||
ஆஸ்மதாசர்ய பர்யந்தாம் | வந்தே குரு பரம்பராம்||





**ப்ராணாயாமம்**

ஓம் பூ:, ஓம் புவ:, ஓகு:மஸுவ:, ஓம் மஹ:, ஓம் ஜன:, ஓம் தப:, ஓகும் ஸத்யம், ஓம் தத்ஸவிதுர் வரேண்யம், பார்க்கோதேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: ப்ரசோ தயாத் | ஓமாபோ ஜ்யோதீரஸோ:, அம்ருதம் ப்ரஹம், பூர்ப்புவஸ்ஸுவரோம் || ஓம் ||

**ஸங்கல்பம்**

மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா, ஸ்ரீபரமேச்’ வர ப்ரீத்யர்த்தம், சு’பே, சோ’பனே முஹுர்த்தே, ஆத்யப்பஹ்மண: த்விதீய பரார்த்தே, ச்’சேதவராஹ கல்பே, வைவஸ்வத மன்வந்தரே, அஷ்டாவில்ச’திதமே, கலியுகே, ப்ரதமே பாதே, ஜம்பூ த்வீபே, பாரத வர்ஷே, பரதகண்டே, மேரோ: தக்ஷிணே பார்ச’வே, ச’காப்தே, அஸ்மின் வர்த்தமானே, வ்யாவஹாரிகே, ப்ரபவாதீனாம் ஷஷ்ட்யா: ஸம்வத்ஸராணாம் மத்யே, * ........ நாம ஸம்வத்ஸரே (வருஷத்தின் பெயர்) *........ அயனே (அயனத்தின் பெயர்), *........ ருதௌ (ருதுவின் பெயர், *........ மாஸே (மாதத்தின் பெயர்) *........ பக்ஷே (வளர்/தேய்பிறை), *........ சு’பதிதௌ, *........ வாஸர யுக்தாயாம் (கிழமையின் பெயர்) *........ நக்ஷத்ர யுக்தாயாம் (நட்சத்திரத்தின் பெயர்), சு’பயோக சு’பகரண, ஏவங்குண விசே’ஷண விசிஷ்டாயாம், அஸ்யாம் சு’பதிதௌ, அஸ்மாகம் ஸஹ குடும்பனாம் க்ஷேமஸ்த்தைர்ய, தைர்ய, வீர்ய, விஜய ஆயுராரோக்ய ஐச்’வர்யாணாம் அபிவ்ருத்யர்த்தம், ஸமஸ்த மங்களாவாப்த்யர்த்தம், ஸமஸ்த துரிதோப சாந்த்யர்த்தம் தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித ஃபல புருஷார்த்த ஸித்யர்த்தம், லோகஸம்ணார்த்தும் ஸ்ரீ சாயி நாத தேவதாமுத்திச’ய, ஸ்ரீ சாயி நாத தேவதா ப்ரீத்யர்த்தம் யதா ச’க்தி, த்யானாவாஹநாதி ஷோடசோ’ பசார பூஜாம்ச கரிஷ்யே||

**விக்னேஸ்வர பூஜை**

வக்ரதுண்ட மஹாகாய சூர்ய கோடி சமப்ரபா
நிர்விக்னம் குரமே தேவ சர்வ கார்யேசு சர்வதா

**கண்டா பூஜை**

ஆகமார்த்தம் து தேவானாம் கமநார்த்தம் ரக்ஷஸாம்|
கண்டாராவம் க்ரோம்யாதௌ தேவதாஹ்வான லாஞ்ச்சனம்||

**கலசபூஜை**

அஸ்மின் கலசே’திவ்ய பரிமள கந்தாம் ஸமர்ப்பயாமி
கந்தஸ்யோபரி ஹரித்ராகுங்குமம் ஸமர்ப்பயாமி

**மந்திரத்தைக் கூறவும்**

ஓம் கங்காயை நம: ஓம் நர்மதாயை நம:
ஓம் யமுனாயை நம: ஓம் ஸிந்துவே நம:
ஓம் கோதாவர்யை நம: ஓம் காவேர்யை நம:
ஓம் ஸரஸ்வத்யை நம:
சர்வதீர்த்ததேவதாப்யோ நம:
கீழ்கண்ட மந்திரத்தை சொல்லவும்.,

**கலச'ச்'லோகம்**

கலச'ஸ்ய முகே விஷ்ணு: கண்டே ருத்ர: ஸமாச்'ரித:|
மூலே தத்ர ஸ்திதோ ப்ரஹ்மா மத்யே மாத்ருகணா: ஸ்ம்ருதா:||

குக்ஷெள து ஸாகரா: ஸர்வே ஸப்தத்வீபா வஸுந்தா: |
ருக்வேதோ(அ)த யஜுர்வேத: ஸாமவேதோ(அ) ப்யதர்வண: ||

ஆங்கைச்'ச் ஸஹிதா: ஸர்வே கலச'ம்பு ஸமாச்'ரிதா: |
ஆயாந்து தேவபூஜார்த்தம் ஸர்வ துரிதக்ஷயகாரகா: ||

கங்கை ச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதி |
நர்மதே ஸிந்து காவேரி ஜலே(அ)ஸ்மின் ஸந்நிதம் குரு||
ஓம் பூர்புவஸ்ஸுவ (3முறை)

என்று ஜபித்து, கலச'த் தீர்த்தத்தை சிறிதளவு எடுத்து பூஜை திரவியங்களையும், ஸ்வாமியையும் ப்ரோக்ஷித்து, தன்னையும் ப்ரோக்ஷித்துக் கொள்ளவும்

**ஆவாஹனம்**

ப்ரஹ்மானந்தம் பரம ஸுகதம்
கேவலம் ஞானமூர்த்திம்
த்வந்த்வாதீதம் கச்ன ஸத்ருஷம்
தத்வ மஸ்யாதிலக்ஷ்யம்

ஏகம் நித்யம் விமலம் அசலம்
ஸர்வதீஸாக்ஷிபூதம்
சாயீநாதம் த்ரிகுணா ஹிதம்
ஸத்குரும் தம்நமாமி

நமஸ்தே சாயிநாதாய
மோக தந்த்ர விநாசினே



குரவே புத்திபோதாய
போத மாத்ரஸ்வரூபிணே.

**அஸ்மின் சித்ரபடே ஸாயிநாதம் த்யாயாமி| ஆவாஹயாமி||**

**ஸமஸ்த உபசார பூஜைகள்**

ஸ்ரீ ஸாயிநாதாய நம: நவரத்ன கஜித் ஸிம்ஹாஸநார்த்தே அக்ஷதான் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: பாதயோ: பாத்யம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஹஸத்தயோ: அர்க்யம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: சுத்'தோதக ஸ்நானம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: வஸ்த்ரம் |வஸ்த்ரார்த்தே அக்ஷதான் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஆபரணம் | ஆபரணார்த்தே அக்ஷதான் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: அலங்காரணார்தே அக்ஷதான் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: கந்தம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஹரித்ராசூ'ர்ணம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: புஷ்பமாலாம் ஸமர்ப்பயாமி.

## ஸ்ரீ சாயி நாத அஷ்டோத்திர சத நாமாவளி

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஓம் | ஸ்ரீ | ஸாயிநாதாய | நம: |
| 2. | ஓம் | ஸ்ரீ | லஷ்மீநாராயணாய | நம: |
| 3. | ஓம் | ஸ்ரீ | கிருஷ்ணராமஸிவ மாருத்யாதி ரூபாய | நம: |
| 4. | ஓம் | ஸ்ரீ | ஸேஷ ஸாயினே | நம: |
| 5. | ஓம் | ஸ்ரீ | கோதாவரி தடஸிரடிவாஸினே | நம: |
| 6. | ஓம் | ஸ்ரீ | ப்க்த ஹ்ருதாலயாய | நம: |
| 7. | ஓம் | ஸ்ரீ | ஸர்வஹ்ருத்வாஸினே | நம: |
| 8. | ஓம் | ஸ்ரீ | பூதாவாஸாய | நம: |
| 9. | ஓம் | ஸ்ரீ | பூதபவிஷ்யத் பாவ வர்ஜிதாய | நம: |
| 10. | ஓம் | ஸ்ரீ | காலாய | நம: |
| 11. | ஓம் | ஸ்ரீ | காலகாலாய | நம: |
| 12. | ஓம் | ஸ்ரீ | காலதர்ப்தமனாய | நம: |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | ஓம் | ஸ்ரீ | காலதர்ப்பதமனாய | நம: |
| 14. | ஓம் | ஸ்ரீ | ம்ருத்யுஞ்ஜயாய | நம: |
| 15. | ஓம் | ஸ்ரீ | அமர்த்யாய | நம: |
| 16. | ஓம் | ஸ்ரீ | மர்த்யாபயப்ரதாய | நம: |
| 17. | ஓம் | ஸ்ரீ | ஜவாதாரய | நம: |
| 18. | ஓம் | ஸ்ரீ | ஸர்வாதாராய | நம: |
| 19. | ஓம் | ஸ்ரீ | பக்தாவனஸமர்த்தாய | நம: |
| 20. | ஓம் | ஸ்ரீ | பக்தாவனப்ரதிக்ஞாய | நம: |
| 21. | ஓம் | ஸ்ரீ | அன்னவஸ்த்ரதாய | நம: |
| 22. | ஓம் | ஸ்ரீ | ஆரோக்ய க்ஷேமதாய | நம: |
| 23. | ஓம் | ஸ்ரீ | தனமாங்கல்யப்ரதாய | நம: |
| 24. | ஓம் | ஸ்ரீ | ருத்தி ஸித்திதாய | நம: |
| 25. | ஓம் | ஸ்ரீ | புத்ரமித்ரகளத்ரபந்துதாய | நம: |
| 26. | ஓம் | ஸ்ரீ | யோக்ஷேமவறாய | நம: |
| 27. | ஓம் | ஸ்ரீ | ஆபத்பந்தவாய | நம: |
| 28. | ஓம் | ஸ்ரீ | மார்க்பந்தவே | நம: |
| 29. | ஓம் | ஸ்ரீ | புத்திமுக்திஸ்வர்காபவர்கதாய | நம: |
| 30. | ஓம் | ஸ்ரீ | ப்ரியாய | நம: |
| 31. | ஓம் | ஸ்ரீ | ப்ரீதிவர்த்னாய | நம: |
| 32. | ஓம் | ஸ்ரீ | அந்தர்யாமிணே | நம: |
| 33. | ஓம் | ஸ்ரீ | ஸச்சிதாத்மனே | நம: |
| 34. | ஓம் | ஸ்ரீ | ஆனந்தாய | நம: |
| 35. | ஓம் | ஸ்ரீ | ஆனந்ததாய | நம: |
| 36. | ஓம் | ஸ்ரீ | பரமேஸ்வராய | நம: |
| 37. | ஓம் | ஸ்ரீ | பரப்ரம்ஹனே | நம: |
| 38. | ஓம் | ஸ்ரீ | பரமாத்னே | நம: |
| 39. | ஓம் | ஸ்ரீ | ஞானஸ்வரூபிணே | நம: |
| 40. | ஓம் | ஸ்ரீ | ஜகத பித்ரே | நம: |
| 41. | ஓம் | ஸ்ரீ | பக்தாணாம் மாத்ருதாத்ருபிதாமஹாய | நம: |
| 42. | ஓம் | ஸ்ரீ | பக்தாபயப்ரதாய | நம: |
| 43. | ஓம் | ஸ்ரீ | பக்தபராதீனாய | நம: |
| 44. | ஓம் | ஸ்ரீ | பக்தானுக்ரஹ காதராய | நம: |
| 45. | ஓம் | ஸ்ரீ | ஸரணாகத வத்ஸலாய | நம: |
| 46. | ஓம் | ஸ்ரீ | பக்திஸக்தி ப்ரதாய | நம: |





| | | | | |
|---|---|---|---|---|
| 47. | ஓம் | ஸ்ரீ | ஞானவைராக்யதாய | நம: |
| 48. | ஓம் | ஸ்ரீ | ப்ரமே ப்ரதாய | நம: |
| 49. | ஓம் | ஸ்ரீ | ஸ்ரீஸம்ஸயஹ்ருதய தௌர்பல்ய பாபகர்ம வாஹனாக்ஷயக்ராய | நம: |
| 50. | ஓம் | ஸ்ரீ | ஹ்ருதயக்ரந்திபேதகாய | நம: |
| 51. | ஓம் | ஸ்ரீ | கர்மத்வம்ஸினே | நம: |
| 52. | ஓம் | ஸ்ரீ | ஸுத்தஸத்வஸ்திதாய | நம: |
| 53. | ஓம் | ஸ்ரீ | குணாதீத குணாத்மனே | நம: |
| 54. | ஓம் | ஸ்ரீ | அனந்த கல்யாண குணாய | நம: |
| 55. | ஓம் | ஸ்ரீ | அமித பராக்ரமாய | நம: |
| 56. | ஓம் | ஸ்ரீ | ஜயினே | நம: |
| 57. | ஓம் | ஸ்ரீ | துர்தர்ஷாக்ஷேப்யாய | நம: |
| 58. | ஓம் | ஸ்ரீ | அபராஜிதாய | நம: |
| 59. | ஓம் | ஸ்ரீ | த்ரிலோகேஷு அஸ்கந்தித கதயே | நம: |
| 60. | ஓம் | ஸ்ரீ | அஸக்யரஹிதாய | நம: |
| 61. | ஓம் | ஸ்ரீ | ஸர்வஸக்திமூர்த்தயே | நம: |
| 62. | ஓம் | ஸ்ரீ | ஸுருபஸுந்தராய | நம: |
| 63. | ஓம் | ஸ்ரீ | ஸுலோசனாய | நம: |
| 64. | ஓம் | ஸ்ரீ | பஹுருப விஸ்வமூர்த்தயே | நம: |
| 65. | ஓம் | ஸ்ரீ | அருபாவ்யக்தாய | நம: |
| 66. | ஓம் | ஸ்ரீ | அசிந்த்யாய | நம: |
| 67. | ஓம் | ஸ்ரீ | ஸுக்ஷ்மாய | நம: |
| 68. | ஓம் | ஸ்ரீ | ஸர்வாந்தர்யாமிணே | நம: |
| 69. | ஓம் | ஸ்ரீ | மனோவாகதீதாய | நம: |
| 70. | ஓம் | ஸ்ரீ | பிரேம மூர்த்தாயே | நம: |
| 71. | ஓம் | ஸ்ரீ | ஸுலபதுர்லபாய | நம: |
| 72. | ஓம் | ஸ்ரீ | அஸஹாயஸஹாயாய | நம: |
| 73. | ஓம் | ஸ்ரீ | அநாதநாததீனபந்தவே | நம: |
| 74. | ஓம் | ஸ்ரீ | ஸர்வபாரப்ருதே | நம: |
| 75. | ஓம் | ஸ்ரீ | அகர்மானேக கர்ம ஸுகர்மிணே | நம: |
| 76. | ஓம் | ஸ்ரீ | புண்யஸ்ரவணகீர்தனாய | நம: |
| 77. | ஓம் | ஸ்ரீ | தீர்த்தாய | நம: |
| 78. | ஓம் | ஸ்ரீ | வாஸீதேவாய | நம: |

| | | | | |
|---|---|---|---|---|
| 79. | ஓம் | ஸ்ரீ | ஸதாம் கதயே | நம: |
| 80. | ஓம் | ஸ்ரீ | ஸத்பராயணாய | நம: |
| 81. | ஓம் | ஸ்ரீ | லோகநாதாய | நம: |
| 82. | ஓம் | ஸ்ரீ | பாவனானகாய | நம: |
| 83. | ஓம் | ஸ்ரீ | அம்ருதாம்ஸவே | நம: |
| 84. | ஓம் | ஸ்ரீ | பாஸ்கரப்ரபாய | நம: |
| 85. | ஓம் | ஸ்ரீ | ப்ருஹ்மசர்யதபஸ்சர்யாதிஸுவ்ரதாய | நம: |
| 86. | ஓம் | ஸ்ரீ | ஸத்ய தர்ம பராயணாய | நம: |
| 87. | ஓம் | ஸ்ரீ | ஸித்தேஸ்வராய | நம: |
| 88. | ஓம் | ஸ்ரீ | ஸித்தஸங்கல்பாய | நம: |
| 89. | ஓம் | ஸ்ரீ | யோகேஸ்வராய | நம: |
| 90. | ஓம் | ஸ்ரீ | பகவதே | நம: |
| 91. | ஓம் | ஸ்ரீ | பக்ரவத்ஸலாய | நம: |
| 92. | ஓம் | ஸ்ரீ | ஸத்புரருஷய | நம: |
| 93. | ஓம் | ஸ்ரீ | புருஷோத்தமாய | நம: |
| 94. | ஓம் | ஸ்ரீ | ஸத்யதத்வபோதகாய | நம: |
| 95. | ஓம் | ஸ்ரீ | காமாதிஸர்வ அக்ஞானத்வம்ஸினே | நம: |
| 96. | ஓம் | ஸ்ரீ | அபேதானந்தானுபவப்ரதாய | நம: |
| 97. | ஓம் | ஸ்ரீ | ஸமஸர்வமத ஸம்மதாய | நம: |
| 98. | ஓம் | ஸ்ரீ | திக்ஷிணாமூர்த்தயே | நம: |
| 99. | ஓம் | ஸ்ரீ | வேங்கடேஸரமணாய | நம: |
| 100. | ஓம் | ஸ்ரீ | அத்புதாநந்தசர்யாய | நம: |
| 101. | ஓம் | ஸ்ரீ | ப்ரபன்னார்த்திஹறாய | நம: |
| 102. | ஓம் | ஸ்ரீ | ஸம்ஸாரஸர்வதுக்ககக்ஷயகராய | நம: |
| 103. | ஓம் | ஸ்ரீ | ஸர்வவித்ஸர்வதோமுகாய | நம: |
| 104. | ஓம் | ஸ்ரீ | ஸர்வாந்தர்பஹிஸ்திதாய | நம: |
| 105. | ஓம் | ஸ்ரீ | ஸர்வமங்களகராய | நம: |
| 106. | ஓம் | ஸ்ரீ | ஸர்வாபீக்ஷ்டப்ரதாய | நம: |
| 107. | ஓம் | ஸ்ரீ | ஸமரஸ ஸன்மார்க்கஸ்தாபனாய | நம: |
| 108. | ஓம் | ஸ்ரீ | ஸ்ரீஸமாத்தஸத்குருஸாயிநாதாய | நம: |

**நாதாவிதமந்த்ரபுஷ்பாணி**
**ஸமர்ப்பயாமி**





## உத்தராங்க பூஜை

ஸ்ரீ ஸாயிநாதாய நம: தூபமாக்ராபயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: தீபம் தர்ச'யாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: தூப தீபானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி

## நைவேத்திய மந்திரங்கள்

(துரையில் சிறிது தண்ணீர் தெளித்து, சுத்தம் செய்து வெற்றிலை, பாக்கு, பழம் முதலியவற்றை தாம்பூலத்தில் வைத்து கீழ்கண்ட மந்திரத்தைச் சொல்லவும்).

ஓம் பூர்புவஸ்ஸுூவ:
தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோதேவஸ்ய தீமஹி
தியோ யோ ந: ப்ரசோதயாத்
தேவஸவித: ப்ரஸுூவ ஸத்யம் த்வர்த்தேன் பரிஷிஞ்சாமி
அம்ருதமஸ்து, அம்ருதோபஸ்தரணமஸி
ஓம் ப்ராணாய ஸ்வாஹா, ஓம் உதாநாய ஸ்வாஹா,
ஓம் ஸமாநாய ஸ்வாஹா, ஓம் ப்ரஹ்மணே ஸ்வாஹா,
பரஹ்மணீக ஆத்மா அம்ருதத்வாய
ஸ்ரீ ஸாயிநாதாய நம: நாளீகேர கண்ட த்வயம், கதலீஃபலம் ஸஹிதம் மஹா நைவேத்யம் நிவேதயாமி (நைவேத்தியம் செய்யும்)
மத்யே மத்யே பானீயம் ஸமர்ப்பயாமி
நைவேத்யாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
சுத்தமான தாம்பூலத்தில் வெற்றிலை, பாக்கு, பழம் எடுத்து வைத்து கீழ்வரும் மந்திரத்தைச் சொல்லவும்,
பூகீஃபல ஸமாயுக்தம் நாவவல்லீ தளைப்யுதம்
கர்ப்பூர சூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ருதிக்ருஹயதாம்
ஸ்ரீ ஸாயிநாதாய நம: தாம்பூலம் ஸமர்ப்பயாமி

## தீபாராதனை

ஸ்ரீ ஸாயிநாதாய நம: கற்பூர நீராஜனம் ஸந்தர்சயாமி
(கற்பூர ஆரத்தி காட்டவும்)
ஸ்ரீ ஸாயிநாதாய நம: நீராஜநானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி / ஸமஸ்தோபசாரான் ஸமர்ப்பயாமி /
(புஷ்பத்தை சுவாமியிடம் சமர்ப்பிக்கவும்)

## மந்த்ரபுஷ்பம்



ஓம் யஜ்ஞேன யஜ்ஞமயஜந்த் தேவாஸ்தாநி
தர்மாணி ப்ரதமாந்யாஸந் |
தே ஹ நாகம் மஹிமாந: ஸசந்தே |
யத்ர பூர்வே ஸாத்ய: ஸந்தி தேவா:|

ஓம் யோ(அ) பாம் புஷ்பம் வேத | புஷ்பவான் ப்ரஜாவான் பசுமான் பவதி | சந்த்ரமா வா அபாம் வேத | புஷ்பவான் ப்ரஜாவான் பசுமான் பவதி | சந்த்ரமா வா அபாம் புஷ்பம் / புஷ்பாவான் ப்ரஜாவான் பசுமான்பவதி | ய ஏவம் வேத | யோ(அ) பாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஓம் ராஜாதி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹினே | நமோ வயம் வைச்ரவணாய குர்மஹே | ஸ மே காமான் காம கா–மாய மஹ்யம் / காமேச்வரோ வைச்ர வணோ ததாது | குபேராய வைச்ரவணாய மஹாராஜாய நம:

### ஓம் ஸ்வஸ்தி ஸாம்ராஜ்யம் பௌஜ்யம் ஸ்வாராஜ்யம் வைராஜ்யம் பாரமேஷ்ட்யம் ராஜ்யம்

மஹாராஜ்யமாதிபத்யம் மயம் ஸமந்தபர்யா
ஈஸ்யாத ஸார்வபௌம:
ஸார்வயுஷாந் த தாபரார்தாத் |
ப்ருதிவ்யை ஸமுத்ரபர்யந்தாய ஏகராளிதீ
ததப்பேஷ ச்'லோக(அ)பிகீதோ மருது:
பர்வேஷ்ட்ரோ மருத்தஸ்யாவஸந் க்ருஹே |
ஆவிக்ஷிதஸ்ய காமப்ரேர்விச்வே தேவாஹ: ஸபாஸத இதி ||
ஓம் ஸ்ரீ நாராயண வாசுதேவ ஸச்சிதானந்த ஸத்குரு
ஸாயி நாத் மஹாராஜ்கீ ஜய்.

ஸ்ரீ ஸாயிநாதாய நம: மந்த்ர புஷ்யம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ ஸாயிநாதாய நம: ச்சத்ர சாமராதி ஸமஸ்த்த
ருாஜோபசாரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி ||
ப்ரார்த்தனை, ப்ரதக்ஷிணம், நமஸ்காரம்
யானி கானி ச பாபானி ஜம்மாந்தர க்ருதானி ச |
தானி தானி விநச்யந்தி ப்ரதக்ஷிண பதே பதே ||




பாபோஹம் பாபகர்மாஹம் பாபாத்மா பாப ஸம்பவஹ:
த்ராஹிமாம் க்ருபயா தேவ சரணாகத வத்ஸலா
ஆன்யதா சரணம் நாஸ்தி த்மேவ சரணம் மம
தஸ்மாத் காருண்ய பாவேன ரக்ஷ ரக்ஷ ஸ்ரீ ஸாயீச்வரா
ஆத்ம ப்ரதக்ஷிண நமஸ்காரன் ஸமர்ப்பயாமி

**ஓம் ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸாயிநாத் மஹாராஜ்கீ ஜய்**

## விபூதி தாரணம்

சாயிநாதரை மனதில் தியானித்துக் கொண்டு இந்த ஸ்லோகத்தை மூன்று முறை சொல்ல வேண்டும்.

ஸ்ரீகரம் நித்யம் சுபகரம், திவ்யம் பரமம், பவித்ரம்
மஹா பாபஹரம் ஸ்ரீ ஸாயி பாபா விபூதிம் தாரயாம்யஹம் |
பரமம், பவித்ரம் பாபா விபூதிம் பரமம் விசித்ரம் லீலா
விழுதிம் பரமார்த்த இஷ்டார்த்த மோக்ஷ பிரதாந்தம்
பாபா விபூதிம் இதமாஸ்ரையாமி ||

இந்த ஸப்த ஸப்தாஹா விரதத்தை மேற்கொள்ளும் 49 நாட்களும் காலையில் பூஜை முடித்தவுடன் உங்களால் இயன்ற அளவு காணிக்கையை பாபாவின் பாதங்களில் சமர்ப்பிக்கவும், பாராயணம் முடிந்த நாளன்று, சமர்ப்பிக்கப்பட்ட அனைத்து காணிக்கைகளையும் திரட்டி, அருகிலுள்ள சாயிபாபாவின் கோவில் உண்டியலில் செலுத்தவும்.

**குறிப்பு:** இப்புத்தகத்தை 49 நாட்களுக்குள் பாராயணம் செய்து முடிக்க வேண்டும். அதோடு 9,12,21 பேர்களுக்கு இந்த புத்தகத்தை வாங்கி கொடுக்க வேண்டும். தங்களால் இயன்றளவு அன்னதானமளிப்பது மஹா விசேஷம்.

## மங்கள ஆரத்தி

ஸ்வாமி ஸாயிநாதா ஷீர்டி க்ஷேத்ர வாஸாயா
நுமகா பீஷ்ட ப்ரதாய மஹீத மங்களம் – ஸ்வாமி
லோக நாதாய பக்த லோக சம்ரக்ஷகாய
நாகலோக ஸ்த்துத்தாய நவ்ய மங்களம் – ஸ்வாமி
பக்த விருந்த வந்திதாய ப்ரஹ்ம ஸ்வரூபாய
முக்தி மார்க்க போதகாய பூஜ்ய மங்களம் – ஸ்வாமி



சத்ய தத்வபோதகாய சாது வேஷயதே
நித்ய மங்கள தாயகாய நித்ய மங்களம் – ஸ்வாமி

## ஆரத்தி (1)



ஆரத்தி எடுப்போம் ஸ்ரீ ஸாயி அமக்கே.
ஆரத்தி எடுப்போம் வியாழக்கிழமையுமே.
பரமானந்த சுகத்தினை அளிப்பாயே.
தயையுடன் எமக்கருள் செய்வாயே
தயையுடன் எமக்கருள் செய்வாயே
துக்க, சோக சங்கடம் தீர்த்தருள்வாயே
வாழ்வில் ஆனந்தம் பொங்க அருள்வாயே
என் மனதில் உன்னை நினைத்ததுமே
அக்கணமே வந்து அனுபவம் தந்தாயே
உந்தன் திருஉதி நெற்றியில் இட்டதுமே
அனைத்து தொல்லைகள் தொலைந்தனவே
ஸாயி நாமமே தினமும் ஜபித்தோமே
நொடியிலும் உம்மை யாம் பிரியோமே
வியாழக்கிழமை உன்னை பூஜித்தோமே
தேவா! உன் கிருபையால் நலம் அடைந்தோமே
ராம, கிருஷ்ண, ஹனுமான் ரூபத்திலே
அழகு தரிசனம் எமக்களிப்பாயே
பல மத முறையில் பூஜித்துமே
பக்தர் குறை கேட்டருள் புரிவாயே
ஸாயியின் நாமம் வெற்றி நல்கிடுமே
தேவா! வெற்றியின் அர்த்தம் நீதானே
ஸாயிதாஸனின் ஆரத்தி பாடுபவனுமே
சர்வ சுகம், சாந்தி வளம் பெறுவானே. (ஆர்த்தி)

## ஆரத்தி (2) (மராத்தி)

ஆரத்தி ஸாயிபாபா ஸௌக்ய தாதாரா ஜீவாம்
சரண ரஜதளீம் நிஜ தாஸாம் விஸாவா பக்தாம் விஸாவா
ஜாரு நியாம் அநங்க ஸ்வரூபி ராஹே டங்க
முமுக்ஷு ஜனா தாவீ நின டோளா ஸ்ரீரங்கா (ஆர்த்தி)




ஜயாமநிம் ஜய் ஸாபாவ தயா தைஸா அனுபவ
தாவஸு தயாகநா ஜஸீ து ஜீ ஹீமாவ (ஆர்த்தி)

துமசே நாம த்யாதா ஹரே ஸம சுருதி வ்யதா
ஆகதா தவ கரணீ மார்க தாவிஸீ அநாதா (ஆர்த்தி)

கலியுகீ அவதார ஸுகுண ப்ரம்ம ஸாசார
அவதீர்ண ஜாலாஸே ஸ்வாமி தத்தா திகம்பர (ஆர்த்தி)

ஆட்டா திவஸா குருவாரீம் பக்தகரீதிவாரீ
ப்ரபுபத பஹாவயா பவ பய நிவாரீ (ஆர்த்தி)

மாஜா நிஜ த்ரவ்ய டேவா தவ சரண ரஜஸேவா
மாகணே ஹேச்சி ஆதா தும்ஹா தேவாதி தேவா (ஆர்த்தி)

இச்சித தின சாதக நிர்மள தோய நிஜ ஸுக
பாஜாவே மாதவா யா ஸாம் பாள ஆபூலீ பாக (ஆர்த்தி)

## ஆரத்தி(3)

ஜயதேவ ஜயதேவ ஸாயீ மஹாராஜ ஸ்ரீ ஸாயீ மஹாராஜ
ஓவாளீதோம் பாவோம் ஆரத்தீ யோகீராஜ (ஜயதேவ)

அகடித கடநா கடலீ பக்த ஜனாம் லாட்டீ
ஸாயீ ரூபாநேம் ஆலே ஜகதீம் ஜகஜ்ஜேட்டி (ஜயதேவ)

ஆகாத ஹீகுரு லீலா ந களே கோணாலா
மங்கல மகந்த மஹிமா ஸகலாம் தாவியலா (ஜயதேவ)

பஸலாம் பாங்குநி பாரிசு சிம்த்யாம்சா ஜோலா
ஆத்மபலாசா தேவ்ஹொம் நவ ப்ரத்யய ஆலா
தேலால் வாசுநி ஸஹஜீ பணாத்யா பேடவில்யா
அகந்த அஸல்ய லீலா ஜகதாஸா திசல்யா (ஜயதேவ)

அசோத கீதீஹி மோட்டயா பாபாம்த்யா ராசீ
நாம ஸ்மரணேம் அவத்யா ஜாதீ விலயாஸீ
க்ருபா ப்ரஸாதே லாபே ஸகவஹி ஸம்ருத்தீ
குசல கராயா யேதி த்யா ருத்தீ ஸித்தீ (ஜயதேவ)

ஷீரடி வாஸீ ஸ்வாமி ஸ்ரீ ஸத்குரு நாதா
துமச்யா சரணீம் ஆதாம் டவியலா மாதா
உமிலிந்த மாதவ காதோ குண கௌரவ பாவே
துரித ஹராவேம் தர்சந் தேஊநீ சுப வ்ஹேம் (ஜயதேவ)

## ஸ்ரீ சாயி சாலீஸா

ஷீர்டி வாஸா ஸாயிப்பிரபோ
நீயே ஜகத்தின் பாதுகாப்பாளர்
தத்த திகம்பர அவதாரம்–
உன்னில் கிருஷ்டி விவகாரம்
த்ரிமூர்த்திரூபா ஓ ஸாயி–
கருணையோடு காப்பாய் ஓ ஸாயி
தரிசனம் கொடுக்க வாருங்கள்–
முக்திக்கு மார்க்கம் காட்டுங்கள் (ஷீர்டி)

கந்தலாடையே (கப்னி) பொன்னாடையாய்–
ஜோல்னா பையே தோளின் அணிகலனாய்
வேப்பமரத்தினடியில் தோன்றி–
பக்கிரி ரூபத்தில் வலம் வந்தாய்
கலியுகத்தில் நீ அவதரித்தாய்–
பொறுமை தியாகம் கற்றுக் கொடுத்தாய்
ஷீர்டி கிராமம் உன்வாசம்–
பக்தர்கள் மத்தியில் உன் ரூபம்
சாந்த் பட்டீல் ஆழ்ந்தார் கவலையிலே–
குதிரையை இருமாதம் காணவில்லையே
ஸாயி நீ அவனுக்கு இரங்கினாய்–
தொலைந்த குதிரையை மீட்டுத் தந்தாய் (ஷீர்டி)

எண்ணைக்கு பதிலாய் நீரூற்றியுமே–
ஒளி கொடுத்தாய் நீ ஜோதிக்குமே
அதனைக் கண்டவர் மெய் மறந்தனரே–
கேட்டவர் வியப்பு மாளவில்லையே
தாத்யாவின் உயிர் ஊசலாடியதும்–
தந்தாயே நீ உன் ஆயுளையும்
தாய் பாய்ஜா செய்த சேவையினால்–
தாத்யா உயிரை காத்தாயே (ஷீர்டி)

பசு, பட்சிகளிடம் இரக்கம் கொண்டாய்–
அன்பாலேயே எமக்கு அரசனானாய்
எல்லோர்பாலும் உன் அருள் நோக்கு–
பக்தனுக்களித்தாய் அமுத வாக்கு
உன் வாயில் படியில் நின்றேனே–
உன்னையே என்றும் துதித்தேனே
அபயம் தந்து காப்பாற்று ஸாயி
கருணை காட்டு ஷீர்டி ஸாயி (ஷீர்டி)

உன்னுடைய அருளாள் துவாரகாமாயி–
பாக்கியமடைந்ததே ஓ ஸாயி
உன் துனியின் ஜ்வாலை பட்டதுமே–
பாவம் போனது சட்டெனவே
பிரளய மழையை சொல்லால் தடுத்து–
பக்தர்களைக் காப்பாற்றினாய்
கோதுமையை அரைத்தாய் அரவையிலே–
அரவையில் காலராவும் அரைந்ததே (ஷீர்டி)

மூலே சாஸ்திரி என்ற அந்தண ஸ்வாமிக்கு–
உனது லீலைகளைக் காட்டினாயே
விஷப் பாம்பு ஷாமாவை தீண்டியுமே–
விஷமிறக்கி அருளினாய் ஜீவனுமே
பக்த பீமாஜிக்கு க்ஷயரோகம்–
பொறுமை இழந்தான் பீமாஜி
உதி வைத்தியம் செய்யாய்–

வியாதியை மாயம் செய்தாய்
காகாஜி கண்டார் உன் திவ்ய ரூபம்—
அவருக்கு அளித்தாய் நீ விட்டல் ரூபம்
தாமுவிற்கு அளித்தாய் சந்தானம்—
அவர் மனம் பெற்றதே சந்தோஷம் (ஷீர்டி)



கருணாமூர்த்தி கருணை காட்டு—
எங்கள் மீது இரக்கம் காட்டு
அனைத்தும் உனக்கே அர்ப்பணமே—
எங்கள் பக்தி பெருகட்டுமே
மேகாவும் உன்னை அறியாமலே
முஸ்லீம் என பேதம் கொண்டானே
உன்னில் காட்டினாய் சிவனையுமே—
மேகாவும் அடைந்தான் பரமபதமே (ஷீர்டி)

மருத்துவருக்கு அளித்தாய் ஸ்ரீ ராம ரூபம்—
பல்வந்தருக்கு அளித்தாய் ஸ்ரீ தத்த ரூபம்
நீமோன்கருக்கு அளித்தாய் மாருதி ரூபம்—
சிதம்பரத்திற்கு அளித்தாய் கணபதி ரூபம்
மார்த்தாண்டருக்கு அளித்தாய் கண்டோபா—
கணுாக்கு சத்யதேவனாக
நரஸிம்ம ஸ்வாமியாய் ஜோசிக்கு—
தரிசனம் தந்தாய் ஸ்ரீ ஸாயி (ஷீர்டி)

இரவும் பகலும் உன் தியானம்—
நித்யம் உன் லீலாபடனம்
பக்தியோடு செய் த்யானம்—
கிடைக்கும் முக்தி மார்க்கம்
உன் பதினொன்று வாக்குகள்—
பாபா அது எங்களுக்கு வேதங்கள்
சரணம் என்று வந்த பக்தர்களை—
கருணை காட்டி நீ காப்பாற்றினாய் (ஷீர்டி)

எல்லாவற்றிலும் என் ரூபம்—
உன் மகிமை அதிக சக்தி மயம்





ஓ ஸாயி நாங்கள் அஞ்ஞானிகள்—
 தாருமய்யா எங்களுக்கு ஞானத்தையே
கிருஷ்டிக்கு நீயே மூலம்
 ஸாயி நாங்கள் உன் சேவகர்கள்
ஸாயி நாம் ஜெபித்துமே—
 நித்யம் ஸாயியை பிரார்த்திப்போம் (ஷீர்டி)

பக்தியை அறிந்து—
 ஸாயினை மனதில் நினைத்துக் கொண்டு
மனதோடு ஸாயி த்யானம்—
 அனுதினமும் செய்ய வேண்டும்
பாபா எரித்த உதி—
 நிவாரணம் தரும் அனைத்து வியாதி
சமாதியிலிருந்து ஸ்ரீ ஸாயி—
 பக்தர்களை காப்பாற்றுவார் ஸ்ரீ ஸாயி (ஷீர்டி)

நம் கேள்விக்கு பதிலில்—
 தருவார் ஸ்ரீ ஸாயி சரித்திரம்
கேளுங்கள் அல்லது படியுங்கள்—
 ஸாயி சத்திரம் என்பதை உணருங்கள்
ஸத் சங்கமம் செய்யுங்கள்—
 ஸாயி ஸ்வப்பனத்தில் தோன்றுவாரே
பாரபட்சத்தை விடுங்கள்
 ஸாயியே நமது ஸத்குரு ஷீர்டி)

வந்தனமய்யா பரமேசா—
 ஆபத்பாந்தவா ஸாயீஸா
எங்கள் பாவங்களை கரையேற்றி
 மனதில் உள்ள கோரிக்கையை நிறைவேற்று
கருணாமூர்த்தி ஓ ஸாயி—
 கருணையோடு எங்களை கரையேற்று
எங்கள் மனமே உன் ஆலயம்—
 எங்கள் சொற்களே உனக்கு நைவேத்தியம் (ஷீர்டி)

# ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீ ஸாயிநாத் மஹாராஜ்கீ ஜய்!

# ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

ஷீர்டியில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் நான்கு ஆரத்திகளும் விசேஷமானது. அதனால் அவரவர்களது பூஜையின் நேரத்திற்கேற்ப ஏதாவது ஒரு ஆரத்தியைப் படிக்கலாம்.

—சுபம்—



அ). சாயிபாபாவின் ஆசிர்வாதத்தை வேண்டுபவனுக்கு அது கிடைக்கும்.

ஆ). சாயிபாபாவின் ஆசிர்வாதத்தை தேடுபவனுக்கு அது கிடைக்கும்.

இ). சாயிபாபாவை நோக்குபவனுக்கு அவருடைய ஆசிர்வாதம் நிச்சயம்.

# ஸ்ரீ சாயி பாபாவின் பதினொரு உபதேச மொழிகள்



ஷீர்டி [illegible]தை எவன் மதிக்கிறானோ அவனுடைய துன்பங்கள் ஒரு முடி[illegible]யடைந்து சௌகரியத்தை அடைகிறான்.

2. துவாரகமாயியை அடைந்த மாத்திரத்தில் பெரும் துன்பத்திற்குள்ளானவர்களும் மிகுதியான சந்தோஷத்தை அடைவார்கள்.

3. இவ்வுலகை விட்ட பிறகும் நான் சர்வ சக்தியுடன் வேலை செய்வேன்.

என்னு[illegible]களுக்கு அநேக ஆசீர்வாதங்களையும், புத்திமதி[illegible]தும்

5. என்னு[illegible] மகுதியிலிருந்தும் பேசும்.

6. என்னுடைய மகுதியிலிருந்து கொண்டே நான் மிகவும் சுறுசுறுப்பாகவும் தீவிரமாகவும் இருப்பேன்.

7. என்னிடம் வருபவர்களுக்கும் என்னைத் தஞ்சமாக அடைபவர்களுக்கும் என் உபதேசத்திற்காக என்னிடம் தீவிர நம்பிக்கை உள்ளவர்களுக்கும் நான் எப்பொழுதும் உயிருடனிருக்கிறேன்.

8. நீ என்னை அடைந்தால் நான் உன்னை கடாக்ஷிக்கிறேன்.

9. நீ என் பேரில் உன் பளுவைச் சுமத்தினால் நான் நிச்சயமாக அதைத் தாங்குவேன்.

10. நீ என் உபதேசத்திற்காகவும், உதவிக்காவும் என்னை அடைந்தால் அவைகளை உடனே நான் உனக்கு கொடுப்பேன்.

11. என்னுடைய பக்தர்களுடைய வீட்டில் ஒரு போதும் தேவை என்பதே இருக்காது.

# ஓம் ஸ்ரீ சாயிராம்

## வாழ்க்கைத் தத்துவம்

மானிடப்பிறவி மிக விலை மதிப்பில்லாதது. அதனை நல்ல விதமாக உபயோகப்படுத்து. இறைவனே நம்மை இந்தப் பூவுலகம் அனுப்பி இருக்கிறார்.

இறைவனையே மறந்தால் என்ன ஆவது இறைவனையே எப்பொழுதும் ஸ்மரனை செய். பிறர் துக்கத்தை பகிர்ந்து அவருக்கு ஆறுதலாக இனிய நாலு வார்த்தைகள் பேசு. எப்போதும் பிறருக்கு நல்லதே செய். அவமானத்தைப் பொறுத்துக்கொள். இரக்கம் கொள்.

வாழ்வில் பிறருக்கு உபயோகமாக, நேர்மையாக நடந்துகொள். முதியவர், குழந்தைகள் மீது அன்பாக இரு. தாய் தந்தையருக்கு சேவை செய். கோபத்தை தியாகம் செய். ஆணவம் கைவிடு, பணிவும் விவேகமும் கொண்டிரு. பிரம்மச்சரியம் கடைபிடி, பரமேஸ்வரம் நமக்கு இந்த உயிர் அளித்து இருக்கிறார். அவர் பக்தியிலேயே மூழ்கிவிடு.



**9 வியாழக்கிழமைகள் விரத பூஜை முடித்தவர்கள் இப்புத்தகத்தை 9,18,21 என்ற எண்ணிக்கையில் வாங்கி பக்தர்களுக்கு இலவசமாக வழங்கவும் மற்றும் தங்களால் இயன்றயளவு அன்னதானமும் வழங்கி**

**பாபாவின் அருள் பெறுங்கள்.**

விலை: 10/-